## இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

சொல்வன்மையே எல்லா நலங்களுள்ளும் நனிசிறந்தது. அச்சொல் நல்லதாயின் ஆக்கம்பெருகும்; தீயதானால் கேடு உண்டாகும். எவரும் விரும்பி யேற்கும் வண்ணம் இனிது சொல்வதே சொல்எனத்தகும். தகுதி யறிந்து சொல்லின் அதனால் அறமும் பொருளும் உளவாம். தன்சொல்லை எவரும் வெல்லமுடியாதபடி அமைச்சர் தெளிந்து சொல்லவேண்டும். பிறர் விரும்புமாறு சொல்லி எதையும் நுணுகிஉணர்ந்துகோடலே உயர்ந்தோர் இயல்பாம். சோர்வில்லாமல் சொல்லவல்லவனையாரும் வெல்லலரிது. சொல் வன்மையுடையவனுக்கு உலகமுழுவதும் உடனே வசமாம். சொல்வலி யுடையார் எதையும் சுருக்கச்சொல்வர். அஃதில்லாதவர் பலசொல்லி அல்ல லுறுவர். கல்வியுடையாராயினும் சொல்வன்மை யிலராயின் அவர் சிறந்து விளக்கார். சொல் நலமுடையவர், மணமுள்ள மலர்போல் எங்கும் நன்மதிப் புறுவர்.

சுரு-ம் அதிகாரம் சொல்வன்மை முற்றிற்று.



## அணிந்துரை.

வண்ணை நே. வை. செல்லையா.

(Lahat Road Ipoh.)

புத்திமிக்க ஜெகவீர பாண்டியனின் போலொருவர் புவியின் மீதோ
எத்திசையும் இலையெனலாம் இன்றமிழின் தனிநூலை எவர்க்குமேற்கக்
கத்தியமும் பத்தியமும் கலந்துவரக் கதைதொடுத்துக் கருத்துங்கூறிச்
சுத்திசெய்தாய் திருக்குறளைச் சுவைசெய்தாய் குறைதவிர்த்தாய் தூய்மை
தானே. (I)

பொய்யாத மொழியுடைய திருக்குறளார் தமிழ்ப்பெளவப் புணரிகாண
நையாத காவியர்க்கும் கலமளித்தான் ஐயிரண்டு நயமுமோங்க
ஒய்யார வண்பரிமே லழகனெனும் புலமிக்கோ னுண்மையாக
மையாரும் புகைக்கலனை நீயளித்தாய் எளிதுசெல மாண்பிதாமே. (2)

ஃ

(பொய்யாமொழியார்.)

தேசமிகு ஜெகவீர பாண்டிய நீ செய்தருளுந் திருநூலொன்றை
ஈசனருளாலெய்தி யின்றுகண்டேன் என்னென்பேன் [illegible]மாண்பை
ஓசைமிகு கடலாடை யுலகிலுள்ளார்க் கின்னமிழ்தாம் அதனையுண்போர்
மாசகன்ற மதியிருந்து மாறாத பேரின்பம் மருவி வாழ்வார். (1)

இன்னதொரு நூல்போல மேல்நாட்டில் இன்றொருநூல் எழுந்ததென்றால்
அன்னதன்சீர் என்றைக்கும் அதையுவந்து கற்பாரின் அளவார் சொல்வார்
மன்னவரும் மொழிமாறி மற்றவரும் நிலைமாறி மயங்கினாலும்
தன்னுடைய தன்மையினால் உலகமெங்கும் பரவியிந்நூல் தழைக்குந்தானே.

(2)

தெள்ளு கலைதேர் ஜெகவீர பாண்டியனும்
வள்ளலுயர் பாவுரையால் வண்குறளார்—தெள்ளமிர்தை
வாரியிந்த வையமுய்ய வைத்தான் கருணையினால்
மாரியென நின்றான் மகிழ்ந்து. (3)